(இ) எவ்வளவு பெட்டிகள் வைக்கப்பட்டுள்ளன ?

(உ) அதை மேலும் அபிவிருத்தி செய்ய என்ன நடவடிக்கை எடுக்கப் பட்டது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) 121½ lb. of honey.

(*b*) 350 bee-hives.

(*c*) Every step is being taken to develop the industry by growing flowers, by giving training to more candidates and also by utilising the services of trained persons in the capturing and development of bee colonies.

* 1690-L *Q.*—SRI M. P. SARATHI (on behalf of SRI S. M. ANNAMALAI) : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) ஜவ்வாது மலையிலுள்ள தேன் வளர்ப்பு நிலையத்தில் எவ்வளவு பேர்கள் பயிற்சி பெறுகிறார்கள் ?

(இ) அவர்களுக்கு என்ன உதவி தரப்படுகிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) At present no candidates are undergoing training.

(*b*) Does not arise.

*Trees—Planting of*

* 1690-M-*Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

ஆறு, கால்வாய், ஏரி கரைகளில் மரம் வளர்ப்புத் திட்டத்தை அமுல்படுத்த எவ்வளவு பணம் ஒதுக்கப்பட்டது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The amount allotted in the Budget Estimate for the year 1961–62 is Rs. 1,600.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், இந்தத் தொகையை பி.டபிள்யூ.டி. இலாகா மூலமாக அல்லது மற்ற இலாக்காக்கள் மூலமாகவே இதை உபயோகப்படுத்தி, இதுபோன்ற மரங்களை வளர்ப்பதற்கு அல்லது வேறுவிதமாக மரங்களை வளர்ப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளதா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON: SRI M. BHAKTAVATSALAM : வன இலாகா இதைப்பற்றி கவனம் செலுத்தி வருகிறது. அவர்கள்தான் ஆற்று ஓரங்களில் இம்மாதிரியாக செடிகளை வைத்து வளர்க்கிறார்கள்.

SRI R. KRISHNASAMI NAIDU : காவேரி நதிக் கரைகளிலே தஞ்சை ஜில்லாவிலும், திருச்சி ஜில்லாவிலும் இந்த இலாகாவினர் தேக்கு மரங்களை வைத்து, அவைகள் மிகவும் செழிப்பாக வளர்ந்திருந்தது. மேலும் அதிக மரங்கள் ஆற்றுக்கரைகளில் வைத்து, குறிப்பாக தேக்கு மரங்களை வளர்ப்பதற்குத் திட்டங்கள் உருவாகி இருக்கிறதா ? அதற்கான என்ன நடவடிக்கைகள் இதுவரை எடுக்கப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : எங்கு தேக்கு மரங்கள் வைத்து வளர்க்கக்கூடுமோ, அங்கெல்லாம் தேக்குச் செடிகளை வைத்து வளர்க்கப்பட்டுத்தான் வருகிறது.